Vol. XV

No. 2

# BULLETIN OF THE GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY MADRAS

EDITED BY

P. THIRUGNANASAMBANDHAN, M.A., L.T.,

*Professor of Sanskrit, Presidency College, In charge of Curator, Government Oriental Manuscripts Library, Madras*

1962

*Price Rs. 2*

# Table of Contents

# NĀLU MANTIRI KATAI

*Edited by*

VIDVĀN T. KRISHNAMURTHY

Tamil language is rich with many an ancient classical work on ethics known for their influence in ennobling the life of the people. But they are written in a high flown style and are availed mostly by the learneds. In later days simple poetical works were produced so as to benefit even laymen. They were of simple rhymes and style with numerous morals, necessary for all walks of life. Ātticūḍi, Pañcatantram etc., belong to this group of literary works.

This simple and beautiful work 'Nālu Mantiri Katai', is one of such kind. It is couched in literary form called 'Kummi.' It explains the havoc that would come out of thoughtless acts.

The story in this poem deals with the four ministers of the king Aḻakēndra of Aḻakāpuri. The king suspected one of the ministers and enquired the other three about it. They said that no one should be blamed without proper enquiry and each explained his advice by a story. The king was convinced by the advice of the three ministers, called for the first and examined him thoroughly. The king found him innocent and presents were given to all the ministers.

It is understood, from the introductory stanza that one 'Cinnattambi', is the author of this work. This is based on a palm leaf manuscript, preserved in the G.O.M.L. Madras, under R. No. 2038 of the Triennial Catalogue of Tamil Manuscripts.

---

# நாலு மந்திரி கதை

மிகப்பழங் காலத்திலிருந்தே, தமிழகத்தில், மக்கட்கு நல்லறிவு கொளுத்தும் நூல்கள் பல, புலவர்களாலியற்றப்பட்டு வந்திருக்கின்றன. அவையாவும் உயர்ந்த செய்யுணடையானியன்றனவாகி, உயர் கல்வியுடையார்க்கு மட்டுமே உதவும் பான்மையினவாய் அமைந்திருந்தன. ஆதலின், சாதாரண கல்வியறிவுடையார்க்கும், பயன்படும் வண்ணம், எளிய, இனிய நூல்கள், பிற்காலத்தே இயற்றப்பட்டன. அவை செய்யுணயமும், சந்த நலமும் கொண்டு, மக்கட்கு வேண்டும் அநேக நீதிக் கருத்துக்களையும் தெரிவிப்பனவாயுள்ளன. ஆத்திசூடி, பஞ்சதந்திரம் முதலிய பல நூல்களும் இவ்வகையைச் சார்ந்தனவேயாம்.

அவ்வகை நூல்களிலொன்றுதான், "நாலு மந்திரி கதை," என்னும் பெயரினதாகிய இச்சிறு நூல். இஃது 'கும்மி', என்னும் ஒருவகை இசைப்பாட்டு வகையாலியன்றதாகும். ஆராயாமற் செயற்படுவாரடையுந் துன்பத்தை எடுத்து விளக்குகின்றது இந்நூல்.

நூற் சுருக்கம் :—அளகாபுரி யென்னுமூரினையாளும், அழகேந்திரன் என்னுமரசன், தென்மதுரா புரியிலிருந்து வந்த போதவாதித்தன், போதவிபூஷணன், போதவியாகரன், போதசந்திரன் என்னும் நான்கு பேர்களின் அறிவுத்திறனை யறிந்து, அவர்களைத் தன் அமைச்சர்களாக ஆக்கிக்கொண்டான். ஒரு நாள் அந்நான்கு மந்திரிகளுள்ளும், பெரியவனுகிய போதவாதித்தன் என்பானுடைய நடத்தையின் மேல் ஐயங்கொண்டு, அதனை மற்ற மந்திரிமார்களிடமெல்லாம் கூற, அதற்கு அவர்கள், "ஆராய்ந்து பாராமல் ஒருவர் மீது குற்றஞ் சுமத்தலாகாது; அவ்விதஞ் செய்யின் நம்மைப் பழி வந்தடையும்," என்று கூறி, அதனை விளக்குவதற்கு ஒவ்வொருவரும் ஒவ்வொரு கதையை எடுத்துக் கூறினர். இறுதியில் போதவர்தித்தனை நேரில் வரவழைத்து, அவன் வாய்மொழி மூலம் அவன் நடத்தைக்குரிய உண்மைக் காரணங்களை அறிந்து, பின்னர் அவன் குற்றமற்றவன் என்பதை யறிந்து, அவனுக்கும், அவனைச் சேர்ந்த மற்ற மூன்று மந்திரிகட்கும், மேலும் பல சிறப்புக்களைச் செய்தான் அழகேந்திரராசன்.

இந்நீதிக் கருத்தை, "செய்யு மொருகருமந் தேர்ந்து புரிவ தன்றிச்—செய்யின் மனத்தாபஞ் சேருமே—செய்யவொரு—நற்குடி யைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்—பொற்கொடியைச் சேர்துயரம் போல்" (நீதிவெண்பா—செய்-16) என்னும் நீதி வெண்பாப் பாடலாலும்; "கண்ணாரக் கண்டதுங் காதாரக்—கேட்டதுங்—கண்டுபோய் விண்டதும் பொய்யாமே; என்னாளும் பூலோகந் தன்னிலே—ராசாக்கள்—ஏதென்று தீர்க்க விளங்க வேணும்," என்னும் இந்நூற் கண்ணிகளாலும் நன்கு அறிய லாம். "முத்தமிழ்போல் கதை சொல்லிடவே," "கதலிபோல வன் தேவியுடன்," எனவரும் உவமை நலங்களும், இந் நூற்கு அழகூட்டுகின்றன.

"வாசம்புகழ் சின்னத் தம்பித்—தமிழுக்கு
வாக்கருள் வாய்பர மேசுவரியே',

என்னும் இந்நூற் கண்ணியால், இந்நூலாசிரியர், 'சின்னத் தம்பி', என்பவராயிருக்கலாமென்று, ஊகிக்கப்படுகிறது. இஃது, இந்நூல் நிலைய மூவருடக்கர்ட்டலாக்கு, 2038-ஆம் எண்ணின் கீழ் வருணிக்கப்பட்டிருக்கும், பனை ஓலைப் பிரதியைப் பார்த்து, பிரதி செய்விக்கப்பெற்று, வெளியிடப்பெறுகின்றது.

**த. கிருட்டின மூர்த்தி**

—o—

# நாலு மந்திரி கதை

## காப்பு

கணபதி யென்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி யென்றிடக் காலனுங் கைதொழும்
கணபதி யென்றிடக் கரும மாதலால்
கணபதி யென்றிடக் கரும மில்லையே.

## நூல்

(கும்மி)

**தந்தனத் தானன தானன தனதன**
**தான தந்தன தானதன.**

செந்தமிழ் போற்றும் அளகாபுரி—வளர்
மந்திரி நாலுபேர் மீதினிலே
சந்ததமுங் கும்மிப் பாட்டுரைக்கச்—சிவன்
தந்த கணபதி காப்பாமே.

வையகந் தன்னிலே நாலுபேர்—மந்திரி
மார்க்கமெல் லாங்கும்மிப் பாட்டுரைக்கச்
செய்யும் படிக்கருள் செய்யும்—வடிவேலர்
சீர்பாத மென்னாட்குங் காப்பாமே.

பூலோகந் தன்னிலே நாலுபேர்—மந்திரி
போதவா தித்த னுடன்பிறந்தார்
சாலோக முள்ள கும்மித்தமிழ்—நிதஞ்
சாற்றுகிறேன் வாலை துணையாக.

போதவா தித்தனும் போத—விபூஷணன்
போதவி யாகரன் போதசந்திரன்
மாதன மருவு மதுராபுரி—தன்னில்
வாழ்ந்திருந் தார்சில காலமதாய்.

தென்மது ராபுரி யிற்பிறந்து—அழ
கேசனிட மந்திரி யானகதை
சண்முகன் பாதந் துணையாகக்—கதை
சாற்றுகிறேன் வாலை துணையாக.

ஆடுஞ் சிதம்பரத் தய்யனருள்—பெற்ற
நாதன் சுப்பிரமணி யற்குழந்தை

நாடெல்லாம் போற்றிய வீரபத்திரன்—சீலம்
நல்ல வரப்பிர சாதனடி.

தேசம் புகழவே பாடியயெல்—லோரும்
சிந்தை மகிழவே கேளுங்கோடி.
வாசம்புகழ் சின்னத் தம்பித்—தமிழுக்கு
வாக்கருள் வாய்பர மேசுவரியே.

ஆதியில் தென்மது ராபுரியில்—வளர்
சாதியிற் காரரள வங்கிசத்தார்
பாதிமதி சூடும் நாதனைப்—போற்றியே
பாதையை விட்டு நடந்தார்கள்.

பாதை வழியாய் நடக்கையிலே—பெருங்
காலான ஒட்டகம் போயிருக்கக்
கோதையர் மோகனர் நாலுபேர்—யோஜனை
கொண்டு வழிகள் நடக்கையிலே
ஒட்டகந் தப்பி யொருமா—சமதை
விட்டு அலைந்து பொருட்காரன்
அஷ்டதிசை யெல்லாந் தேடியலுத்—திவர்
கிட்டவே வந்து உரைத்தாண்டி.
ஒட்டக மிவ்வழி கர்ணீ—ரோவென்
றுரைத்திட நாலு பேருமிருந்து
சட்டெனத் தப்பிய ஒட்டகமும்—ஒத்தைக்
கண்பொட்டை யென்றுரைத் தாண்டி.
சூலென் றொருவ னுரைத்தாண்டி—முழங்
கால்முட மென்றொரு வனுரைத்தான்
கூழைவா லென்றொருவ னுரைத்தா—னவர்
கூறின துஞ்சரி யாயிருக்க
சொன்ன அடையாளம் தான்சரி—தானென
அய்யனே ஒட்டக மெங்கேயென்றான்
கண்ணாலே ஒட்டகங் கண்டதில்லை—தடங்
கண்டுரைத் தோமென் றுரைத்தார்.
பார்த்து உரைத்த மொழியேது—நாடின
தோத்திர மாயழ கேசனிடம்
சாற்றுவோம் வாருங்கா ளிம்மொழியை—யென்று
நேர்த்தியாய்க் கூடி நடந்தார்கள்.

ஒட்டகங் காணுமென் றேயுரைத்தா—லதுக்
குள்ள அடையாள மேதுரைத்தீர்
நட்டனை செய்யாமல் நீங்களெல்—லோரும்
நவிலுமென் றேராசன் தானுரைத்தான்.

இராச னுரைத்த மொழிகேட்டு—மந்திரி
நாலுபேரு மெத்த வேமகிழ்ந்து
போசன் பதாம்புயந் தாழ்ந்து—மந்திரி
புத்தி விசேஷ முரைத்தாரடி.

போதவா தித்தனப் போதுசொல்வா—னொரு
பாரிசங் கூடிட் டிறைமேய்ந்து
பேதமை யாக நடக்கவொரு—கண்பொட்டை
யென்றேநா னுரைத்தே னென்றான்.

போதவி பூஷணன் தானுரைப்பான்—ஒட்டகை
போகையி லேபின்னங் கால்பதியச்
சாதக மாயில்லை யாகையினால்—கெர்ப்பந்
தானென்று சொல்லி யுரைத்தேனென்றான்.

போதவி யாகரன் தானுரைப்பான்—ஒட்டை
போகையி லேமுன்னங் கால்தூக்கிப்
பாதை வழியை நடக்கையிலே—ஒட்டை
காலு முடமென்று தானுரைத்தான்.

போத சந்திரன் தானுரைப்பான்—பாதை
போகையி லேயீக்கள் கடித்தரெத்தம்
பாதை வழியே சிதறினதா—லொட்டை
கூழைவா லென்றுரைத் தேனென்றான்.

இப்படி யாகவே நாலுபேர்—மந்திரி
ஒப்பற வேயு ரைத்தார்கள்
செப்பம தாயழ கேந்திரனு—மகா
விற்பன முள்ளவ ரென்றுசொல்லி

சொல்லுமொழி யாலே ஒட்டகந்—தன்னைத்
தொடர்ந்ததுக் காயிரம் பொன்கொடுத்துச்
செல்லுமென் றுசொல்லித் தான்அனுப்பிய—பேர்
செப்பினார் நாலு பேரைப்பார்த்து

பாகத்துடன் வாசல் மந்திரி—காரியம்
பார்த்து அதிகாரஞ் செய்யுமென்று

போசனத் துக்கோ ராயிரம்—சம்பளம்
பொன்னுகொடுத் தங்கே வைத்தாண்டி.
நாலுபேர் மந்திரி மாரி—ருக்க
ராசனும் வாசமாய் வாழ்ந்திருந்தான்.
பாலும் பழமு முண்டாகி—யுலகம்
பாங்காக வேநி றைந்திருக்க
ராச னிருந்து அரசாள—மந்திரி
நாலுபே ருமதி காரஞ்செய்ய
வாசனை யாகவே தானிருக்க—வினை
வந்தவகை தன்னைக் கேளுங்கோடி.
பட்டணம் அஸ்த மானவுடன்—பரி
சோதனை பார்க்கவே வேணுமென்று
கட்டழ கனெனும் போதவா—இத்தனும்
பட்டணஞ் சுத்தியே வந்தாண்டி.
பட்டண மத்துக்கும் வடபுறத்தில்—வட
பத்திர காளி யொருகோவில்
துட்ட மகமாயி அர்த்தராத்திரி—வேளையில்
சோதனை யாக அழுகலுற்றாள்.
பத்திர காளி குரல்கேட்டுச்—சிவ
பத்தனும் போதவா இத்தனுமே
சித்தங் கலங்காமல் பத்திர—காளிமுன்
செப்பினன் போதவா இந்தனுமே
ஆரடி யம்மா அழுகிறது—உந்தன்
அடிமையிதோ வந்து நிற்கிறேனே
பாரடி யென்முகம் மாதாவே—பர
மேச்வரி யேயென் றுரைத்தாண்டி.
சொன்ன மொழிகள் தனைக்கேட்டுச்—செகச்
சோதியெனும் பத்திர காளியப்போ
என்னஅ தாரடா வந்தவனின்—னேரம்
எந்தனுக்குச் சொல்லு மென்றுரைத்தாள்.
காளி யுரைத்த மொழிகேட்டுக்—கரு
ணாகரன் போதவா இத்தனும்
சூலிகங் காளி மகமாயி—உந்தன்
சொந்த அடிமையாய் வந்தனன்
சொந்த அடிமையாய் வந்தவனென்—றுயே
வந்தவகை சொல்நீ யாரென்றாள்.

விந்தை பெறுமழ கேசனும்—வாசல்
மந்திரி போதவா தித்தனென்றான்.

வாடா மகனே யென்றுரைக்க—மக
மாயியைச் சுற்றி யடிபணிந்து

தேடக் கிடையாத அம்பிகையே—குரல்
செய்த வகையெனக் கேதுரைப்பாய்.

என்துய ருன்னுடன் சொன்னதினு—லதி
லென்னவரும் போத வாதித்தனே

கண்துயி லாய னுடன்தங்கையே—உந்தன்
கருணு கடாக்ஷ மதால்தீர்ப்பேன்.

போதவா தித்தன் மொழிந்திடவே—பரி
பூரணி மெத்த மனமகிழ்ந்து

நாதன் கயிலேயில் வீற்றிருக்குஞ்—சிவ
நாயகன் சொன்னதைக் கேளுங்கோடி.

மந்திரி போதவா தித்தனே—நானும்
வகையுடன் சொல்லுறேன் கேளுமிப்போ

தந்திர மாகவே ராசனமு—கேந்திரன்
தாரணி யின்னுளும் வாழ்ந்திருந்தான்;

தாயேநீ யென்று பணிந்திருந்தான்—நானும்
தாட்சி யில்லாமல் மகிழ்ந்திருந்தேன்

நீயென்று வந்தாயே போதவா—தித்தனே
நானென்று சொல்கிறேன் கேள்மகனே.

நாளேப்பொழு தஸ்த மானவுடன்—நல்ல
ஒருநாழி கழித்தபின் சென்றவுடன்

வேழைக் குரையாக பஞ்சணே—மெத்தைமேல்
வேறுன மனேயா ளுடன்படுக்கச்

சர்ப்பமொன்று வந்து தான்தீண்டும்—பின்னும்
சாதனே யாய்மறு தேசத்தானும்

கப்பமிடு முறையா கப்பொரி—யம்புக்
கையில்தீர நெஞ்சி லூடுருகச்

சம்பா வரிசிநஞ் சாகவரு—மதைச்
சாப்பிட்டால் பஞ்ச பூதம்போகும்

அன்பாக இவ்வதையைத் தீர்ப்பையே—யானல்
ஆளலாம் பூலோக மென்நாளும்.

என்றுமக மாயி தானுரைக்கப்—பொன்
ஈரடி தன்னைப் பணிந்தெழுந்து
நன்றுந்தன் பாதபங் கயமதனு—லதை
நானே விலக்குவே னென்றுசொல்லித்

தாளினைப் போற்றியே வந்திருந்தா—னிரவு
தாழ்ந்துமருண னுதையஞ் செய்தான்
காளிதான் சொன்ன படிக்கு—நடக்கவும்
காரண மாகத் திரிந்தாண்டி.

வந்தது தேசம் உடுவறையாய்ச்—சம்பா
வர்க்கம் அரிசிப் பணியாரம்
நந்து..............லவுமழ கேச—னிடத்திலே
சொந்தமாய்க் கொண்டுபோய் வைத்தார்கள்.

கண்டர சன்மகிழ்ந் திருக்க—அதைக்
காரணமாய்ப் போத வாதித்தனுமே
இன்றதி சயந்தா னிருக்குதையா—யென்று
மந்திரி சொல்ல ராசனுமே

காரண மேதுகாண் மந்திரியே—அதைக்
காட்டுங்கா ணென்றுதான் ராசனுமே
பார்மன்ன வன்விட்ட உடுகரை—நாளைப்
பார்க்கலா மென்றொரு பக்கம்வைத்தான்.

மந்திரி சொல்வது ராசனுந்தான்—வெகு
சிந்தையாய் மெத்த மனமகிழ்ந்து
எந்தவிதங் காணு மந்திரியே—யென்று
ஏகினர் போசன சாலையிலே

சாதம் அரிசிச் சமைத்திருக்க—அன்னந்
தான்பொசிக்கும் ராசன் வேளையிலே
வேதன் விதியை விலக்கவென்று—மந்திரி
வேணும் மூணுபிடி சாதமென்றான்.

அன்னமென்று மந்திரி தான்கேட்க—அழ
கேசனும் மூணு பிடிகொடுத்தான்
தின்னென்று ராசன் கொடுத்தவன்னத்தை—யொரு
சேலையில் வைத்து முடித்தாண்டி.

அன்று பகலோன் மறைந்திடவே—அர்த்த
ராத்திரி காளிதான் சொல்படிக்கிச்

சென்று அரண்மனை தான்புகுந்து—ராசன்
 தேவியுடன் நித்திரை செய்கையிலே

சர்ப்பம் வரக்கண்டு போதவா—இத்தனும்
 தன்கையின் மந்திர வாளதினல்

விற்பன முள்ளவன் போதவா—இத்தனும்
 வெட்டினன் ரெண்டு துண்டாக

வெட்டி விழுந்திடும் பாம்புடன்—ரெத்தம்
 மெல்லிநல்லாள் கொங்கை மீதில்விழப்

பட்டபா டுகளுக் கிப்படியோ—வென்று
 பார்த்து மனதுகள் புண்ணுகச்

சுண்டு விரல்நகத் தாலெடுத்து—விரல்
 துண்டா யிணக்கிமேல் கட்டிவைத்தான்

கண்ட தாரடா வென்றுரைத்தாள்—தேவி
 காரணன் போதவா இத்தனென்ருன்.

ராசனைத் தேவியுந் 'தானெழுப்பி—நல்ல
 தாச்சுதே போதவா இத்தனும்

காசுபொ ருத பையலுமென்—கொங்கையைக்
 கையினலே தொட்டா னென்றுரைத்தாள்.

தேவி யுரைத்த மொழிகேட்டு—ராசன்
 திடீரென்று தானு மெழுந்திருந்து

பாவிப்பயல் செய்த ஞாயத்துக்—கென்ன
 பாவனை செய்குவோ மென்றுசொல்லி

நிற்கிற போதுதான் ரெண்டாம்சாமம்—காவல்
 நீதன் போத விபூஷணனும்

பக்குவ மேது மறியாம—லப்போ
 பாரிசுத்தி வீதி தானும்வந்தான்.

வாரதைக் கண்டங்கே யாரடா—வென்று
 வழுத்தினன் ராசன் மகேசுவரனும்

வீராதி வீர னுரைத்திடவே—காவல்
 போதவி பூஷண னென்றுரைத்தான்.

பெத்தபிள் ளையிலு முற்றதுணை—யாகப்
 பேருலக் மெங்கு மறிந்திருக்கச்

சத்துரு செய்தானே உன்தமய—னர்த்த
 ராத்திரி போதவா இத்தனும்

சப்பிர கூடமஞ் சமீதினிலே—யென்
தாரமும் நானும் படுத்திருக்கத்

துர்ப்புத்தி யுள்ளவன் போதவா—இத்தனுமென்
தோகைய ரைத்தொட நீதமுண்டோ

என்று அரச னுரைத்திடவே—மனதி
லெண்ணியே போத விபூஷணனும்

நன்று நன்றென தய்யாவே—யென்று
நாயகன் பாதம் பணிந்துரைப்பான்.

கண்ணாரக் கண்டதுங் காதாரக்—கேட்டதுங்
கண்டுபோய் விண்டதும் பொய்யாமே

என்னாளும் பூலோகந் தன்னிலே—ராசாக்கள்
ஏதென்று தீர்க்க விளங்கவேணும்.

தீர்க்க விளங்காத காரியத்தால்—வந்த
தீவினை முன்னாள் நடந்தகதை

மார்க்கமுடன் சொல்லக் கேளுமையா—வென்று
மந்திரி சொல்ல மகிழ்ந்தாண்டி.

பாஞ்சால மென்றொரு தேசமையா—அந்தப்
பாரையு மாண்டா னொருவேடன்

வாஞ்சையா யாளு மிடத்திற்—பரதேசம்
மன்னனுக்குத் தாரஞ் சொல்லாமல்

பிள்ளையைப் போலவே வளர்த்தான்—வயிரவன்
பேரும் வனமிருக சிங்கனென்றும்

வெள்ளை நிறமுள்ள மிருக—சிங்கனை
வேடனுங் கூட்டி நடந்தானே.

கேத கரபுரி பட்டணத்திலே—அங்கே
கேசவ னென்றொரு செட்டியிடம்

சாதக மாயவன் வேடனும்போய்—மனந்
தாவி யவனுட னேதுரைப்பான்.

செட்டியாரே யெங்கள் ராசனுக்குத்—திரை
செல்லவே ணுமொரு ஆயிரம்பொன்

வட்டி கொடுத்துத் திருப்பும்—வரையினில்
வனமிருக சிங்கத்தை யீடாக

வைத்துக்கொள் ளும்மென்று சீட்டெழுதிக்—கையில்
வாங்கினன் ஆயிரம் பொன்தானும்

கையுக்குத் துணையான மிருகசிங்—கத்தையும்
கையிற்கொ டுத்தான் வணிகனிடம்

வாரும் வனமிருக சிங்கத்தை—வைத்து
வாங்கினன் செட்டி யிடம்பொன்னும்

சேரும் வரைக்கும் அவனிடத்திற்—செ[ா]ன்ன
சேதியைக் கேட்டிருந் தேவாழும்

என்று புலிவேடன் நாயிக்கிப்—புத்திசொல்லி
யின்பமாய்த் தன்னுட தேசமதில்

சென்று திரையைச் செலுத்திவிட்டுப்—பணம்
சேகரஞ் செய்திடு நாளையிலே

வேட ராசனுந் தானிருக்க—வன
மிருகசிங்க மவனிடந் தானிருந்தான்

பாடா விதியாக வினைகளெல்லாம்—வந்த
பாவகஞ் சொல்கிறேன் கேளுமையா.

கப்பல் வியாபாரஞ் செய்யவென்று—செட்டிக்
காரிய மாய்வன சிங்கமதே

முப்பழமுஞ் சோறும் உண்டுகொண்டு—வீட்டைச்
செப்பமுடன் காரு மென்றுரைத்தான்.

நல்லதென்று மிருக சிங்கன்சொல்லச்—செட்டி
நாயகன் வாரியில் தானேகக்

கள்ளத்தன மாகச் செட்டிபெண்—சாதியும்
கையிணக்கம் பின்னே செய்யலுற்றாள்.

சோரன் நிதமும் வருகிறது—மிவள்
சொந்தமாய்க் கூடி மருவுறதும்

வீரன் வனமிருக சிங்கமும்—நல்ல
வேளை வரட்டுமென் றேயிருந்து

வந்தொரு ராத்திரி வீட்டிற்—புகுந்தவன்
மன்னை தனிலவ னைப்பிடித்துச்

சந்துவேல் வேருய்ப் பிளந்தெறிய—அத்தைத்
தான்கண்டாள் செட்டி மனையாளும்

கையை நெறித்து அவனை—யெடுத்துப்
புழக்கடை தனிலாழக் குழிதோண்டி

அய்யோவென் றவனைத் தூக்கியெடுத்—துப்போய்
ஆழக் குழியிற் புதைத்தாளே.

வீட்டி லதிசயந் தானிருக்கக்—கடல்
மேவிய செட்டியுந் திரும்பிவரத்

தாட்டீக மாகவே வந்திருக்க—அப்போ
சந்தோஷ மாய்வன சிங்கமது

கட்டி வணிக னிடமோடும்—புழைக்
கடையி லோடிபின் னூளையிடும்

செட்டியி தேதென்று போகையிலே—முன்
செத்த பிணத்தை வெளியிழுக்க

மன்னை தனிலே கடித்ததுவும் – அவன்
மாண்டதுவும் பெண்டாட்டிச் சேர்ந்ததுவும்

அன்று யிதுமுதல் யென்னைச்சுகுணம்—பாராம
லாவி யில்லையென் றுரைத்ததுவும்

நாயு ரைத்த மொழிகேட்டுச்—செட்டியந்த
நாயகி தன்னை வரவழைத்து

வாயைக் கிழித்துத் துரத்திவிட்டு—அப்போ
வாரும் வனமிருக சிங்கமென்று

வேட னெழுதிக் கொடுத்த—முறியையும்
மெய்ப்புடன் செட்டியுந் தானெடுத்துச்

சோடச மாய்வன சிங்கங்—க்ழுத்திலே
சொந்தமுடன் போட்டுச் சொல்வாண்டி

எந்த னுக்குநீ செய்த—உபகாரம்
ஏழுசென் மத்துக்கும் நான்மறவேன்

சிந்தை மகிழ்ந்துமுன் தந்த—யிடத்திலே
சேரும் வனமிருக சிங்கமென்றான்.

ஆமென்று சொல்லி வனமிருக—சிங்கம்
அப்பரை[டி] யைவிட்டு நடந்ததுவே

நாமின்று செட்டிக்கு நாணயங்—கொண்டுபோய்
நாயைத் திருப்புவோ மென்றுசொல்லிக்

காட்டுக்குள் ளேவேடன் தான்வரவே—அத்தைக்
கண்டு வணிக னிடமோடும்

சீட்டுக் கழுத்திலே தான்போட்டு—எதிர்
சென்றுதான் வேடனைக் கண்டதுவே

வந்தவ னமிருக சிங்கத்தைத்—தானிது
வஞ்சனை செய்திப்ப வந்ததென்று

அந்தவி டத்திற் செடியிற்—கட்டியே
கழுத்தறுத்துப் போட்டு விடந்தாண்டிப்

பட்டணஞ் சென்று யிடைவழியிற்—செய்த
பாவனை செட்டி யிடம்புகலக்

கட்டி யழுது வணிக—னுரைத்ததைக்
காரண மாய்வினை வந்ததென்று

வேட னுடனே யிறந்தானே—செட்டி
கூடவும் உயிரை விடுத்தானே

தேடி யலைந்து மொழிகேட்டு—வேடன்
தேவியுங் கூட மடிந்தாளே.

இப்படி யல்லவோ யிறந்தார்கள்—முன்னே
யேதென்று தீர விசாரியாமல்

அப்படி யல்லவோ வந்து—முடியும்
என்னய்ய னேயென் றுரைத்தாண்டி.

போதவி பூஷணன் சொன்ன—கதையைப்
பொருத்தமுடன் ராசன் தான்கேட்டு

நீதி முறைசரி தானென்று—சொல்லியே
நெஞ்சில் நினைத்தப்போ மந்திரியென்றான்.

யுத்தியென்று சொல்லித் தான்போனு—னப்போ
போதவி யாகரன் பட்டணத்தைச்

சுத்தி வருகையில் ராசனைக்கண்—டங்கே
தோத்திரஞ் செய்தப்போ நின்றாண்டி.

நின்றவன் றன்னையுந் தான்பார்த்து—என்ன
நீதங்காணும் போத வியாகரனே

மண்டபந் தன்னிலே சப்பிரகூ—டத்தினில்
மங்கை யுடனே படுத்திருக்க

நித்திரை சோதித்து அர்த்தராத்திரி—வேளையில்
பெற்றதா யென்று நினையாமல்

கறததத் துரோகி போதவா—தித்தனென்
காரிகை யைத்தொட நீதியுண்டோ.

என்னடா போத வியாகரனே—யென்று
சொன்னதெல்லா மந்திரி தான்கேட்டு

மன்னவன் பாத மடிதொழுது—மூன்று
மந்திரி சொல்லப் புகழ்ந்தாண்டி.

வாரு மையாஅழ கேந்திரனே—யிந்த
வையகம் ஆளும் மனுவேந்தே

பாருல கில்வரும் ஞாயங்க—ளேதும்
பராபர மாக விளங்கவேணும்.

ஏது பராபரம் செய்யாமல்—அதில்
இன்ன படியென் றறியாமல்

சூதுமுன் னாலே நடந்தகதை—யொன்று
சொல்லுறேன் கேளென் றுரைத்தாண்டி.

சந்திர கிரியொரு தேசமையா—அந்தத்
தாரணி யிலொரு வேதியனும்

மந்திர வேத முறையறிந்து—ஒரு
மைந்தரில் லாத படியாலே

புத்திர வாஞ்சைப் பெரிதாகிக்—கீரிப்
பிள்ளையைத் தானீன்ற பிள்ளையைப்போல்

எத்தேச காலமும் அய்யருட—தேவி
யேந்தி யிருகையால் தான்வளர்த்தாள்.

கஞ்ச மலரோன் கிருபையினால்—கெர்ப்பங்
காரிழை முன்னூறு நாள்சுமந்து

மஞ்சன் பிறந்து வளர்ந்திடவே—பெற்ற
மாதாவும் மெத்த மகிழ்ந்திடவே

தொட்டிலிற் பிள்ளைப் படுத்திருக்கக்—கீரியும்
பத்திர மாய்ப்பார்த் திருக்கவேதான்

போட்டி யெடுத்து அரைக்கீரைக்—கொய்யவே
போயினாள் கொல்லைக் கிணத்தருகே

கொல்லைதனி லம்மாள் தானிருக்கக்—கீரிப்
பிள்ளையுந் தொட்டி லிடமிருக்கத்

தொல்லைவினை யாலே வீடெல்லாம்—வந்த
துயரத்தைக் கேளுங்கா ணய்யாவே.

கம்பீர மாய்ப்பிள்ளைத் தானுறங்க—அப்போ
கேதுவும் தொட்டிலின் மீதிறங்கத்

தம்பியைத் தீண்ட வருகுதென்று—கீரித்
தானது பாய்ந்து கடித்ததுவே

பாம்புக்கடி பட்ட துக்காகப்—பெற்ற
பாவையி டத்தி லதுபோகச்

சாம்பலுடன் ரெத்தமா யிருக்குதென்று—தன்
பிள்ளையைக் கொன்று வந்ததென்று

முன்னும்பின் னென்று மறியாம—லிவள்
மூர்க்கமா யாதொன்றும் பார்க்காமல்

பன்னறுவாள் கையில் தானெடுத்துக்—கீரி
தன்னைப் பிடித்துக் கழுத்தறுத்தாள்.

கீரி தன்னையும் கழுத்தறுத்து—மந்தக்
கேதகை யாகிய மாபாவி

மாறி யழுது புரண்டுருண்டு—வீட்டு
வாசலிலே வந்து பார்க்கையிலே

சர்ப்ப மிறந்து கிடக்கிறதும்—பிள்ளை
தானிருந் துவிளை யாடுறதும்

யிப்படி யாயிப் பழிவந்ததென்—றந்த
ஏந்திழை பிள்ளை யுடனிறந்தாள்.

வேதியனும் வெளியிற் போனவனும்—வெகு
மெய்ப்புடனே யித்தைத் தான்பார்த்து

ஆதி முடிகளி லிப்படியோ—வென்று
அய்யனுங் கூட யிறந்தானே.

இந்தப் படிக்கு இறந்தார்கள்—முன்னே
யேது பராபரஞ் செய்யாமல்

அந்தப் படிக்கல்லோ வந்து—முடியும்
என்னய்ய னேயென் றுரைத்தாண்டி.

மூணுஞ்சா மந்தனில் போதவியா—கரனும்
முத்தமிழ் போல்கதை சொல்லிடவே

ஆனு லறிபோ வென்று—ரைத்திட
அப்பவே போதசந் திரனும்வந்தான்.

வந்தவன் ராசனைக் கண்டு—வணங்கிட
வாருங்காண் போத சந்திரனே

அந்தப் புரத்திலே போதவரா—இத்தன்
வந்தவகுணஞ் செய்ததைக் கேட்டாயே

மாதுடன் பஞ்சணை மெத்தையின்மேல்—சப்பிர
மஞ்சத்தில் நானும் படுத்திருக்கச்

சூதுடன் ராத்திரி வந்தவ—னென்னுட
தோகைய ரைத்தொட நீதமுண்டோ?

மந்திரி தன்னுடன் தானுரைக்க—வந்து
மன்னவன் பாதம் அடிதொழுது

செந்திரு மேவிய திண்புயனே—செக
தீச்வர னேஅழ கேசுவரனே

பொல்லாத வன்போத வாதித்த—னென்று
பிறந்ததோ தங்கள் திருவுளத்தில்

உள்ளதோ வொன்றறிந் தாலும்—பின்னும்
ஒன்றுபத் தாக விளங்கவேணும்.

சொன்ன மொழியைநான் கேட்டாலும்—வந்த
துன்ப மொருகதை சொல்லுகிறேன்.

மிதிலை யென்றொரு தேசமையா—கண்ணு
மில்லாத வன்பிற விக்குருடன்

கதலி போலவன் தேவியுட—னந்தக்
காசினியை நோக்கித் தானடந்தான்.

பாதி வழியிலே வந்திருக்க—ஒரு
பாதகன் அவ்வழி யால்நடக்கக்

கோதை யிவளாசை கொண்டு—பிறவிக்
குருடனை விட்டு நடந்தனளே.

பாவிப் பயலே வந்திடுங்—காரியம்
பகருவேன் கேளுங்கா ணய்யாவே !

காவேரிப் பட்டண மீதி—ருந்து
கலிங்கச் செட்டியவன் தேவியுடன்

கோபமாய் மாமனுர் வீட்டி—லிருந்து
குருட னிருக்கும் வழியில்வந்தான்.

வந்த வணிகன் குருடன்—புலம்பிய
வார்த்தையைக் கேட்டவன் தானுரைப்பான்

பந்துமுலை யாளென் தேவியுட—னிந்தப்
பாதை வழியாக வந்திருந்தோம்.

வெள்ளாழ னென்றொரு பாவிவந்தான்—எந்தன்
மெல்லியைக் கூடவே தான்புணர்ந்தான்

உல்லாச மாக நடந்தார்கள்—நானும்
ஒண்டியாய் ஆறுநாள் பட்டினியாய்

நின்று தவிக்கிறேன் காட்டுக்குள்ளே—யுங்கள்
வசமா யென்னையுந் தான்கூட்டிச்

சென்று ஒருநகர் மீதில்விட்டால்—உங்கள்
செனமமு மென்றைக்கும் பலனுகும்.

அந்தகன் சொன்ன மொழிகேட்டுச்—செட்டி
அன்னம் வயிறுரொம்பத் தான்போட்டுக்

கொந்து முலையாளைக் கோல்கொண்டு—பின்னாலே
கூட்டிவா வென்றுரை செய்தானே.

கூட்டிவா வென்றுரை செய்திடவே—அந்தக்
கோதையாள் நாயக னைப்பார்த்து

காட்டினி லிருக்குங் குருடனைக்—கூட்டிநான்
காசினியிற் போக ஞாயமில்லை

நாயகி சொன்னது கேளாமல்—செட்டி
நன்மையுண் டென்னவே தான்நினைந்து

தாயக மாகவே குருடனுந்—தேவியும்
தானும் வ்ழியில் நடந்தார்கள்.

சிங்கள தேசத்திற் பண்பா—யிருந்தொரு
செட்டியார் வீட்டில் தானிருந்து

திங்க ளுதிக்கச் சமையல்பண்ணி—யவர்
செங்கதி ரோனு முதித்திடவே

மூவருங் கூடி விசைய—நகரமுந்
தாவியே பாதை வழிநடக்கக்

கேள்வியிவ் வூரிலே யில்லையோர்வென்—றந்தப்
பாவிக் குருட னுரைத்தாண்டி.

பாவிக் குருட னுரைத்திடவே—அந்தப்
பட்டண மீதிற் பலசனங்கள்

கூவி யழுத குருடனைச்—செட்டியைக்
கோதையை மூவ ரையும்பார்த்து

ஏது அழுதது வென்றுரைக்க—அப்போ
தீது நினைந்து குருடனுமே

மாதுடன் நானும் வருகையிலே—செட்டி
மையல்செய்து பெண்ணைத் தான்கூட்டி

என்னைவிட்டுப் போரா னென்றுரைக்கக்—கூடி
யேகினூர் இராச னிடந்தனிலே

கண்ணுக் கெட்டான் சொல்லைத்தான்—கேட்டந்தக்
கற்பனை ராசன் அறியாமல்

செட்டியை வெட்ட உரைத்தாண்டி—பெண்ணே
கட்டியே கண்ணும் பரையடைத்தார்.

மட்டிக் குருடன் ஒத்தையிலே—பின்னும்
வார மனிதர் தெரியாமல்

காட்டுக்குள் ளேசெட்டி வந்ததுவும்—தன்னைக்
காப்பர்த்தி யன்னங் கொடுத்ததுவும்

நாட்டுக்குள் ளேகொண்டு வந்ததுவும்—செட்டி
நாயகிப் பெண்ணு ளென்றதுவும்

நீதிகேட்ட ராசன் கேட்டதுவும்—என்ன
நீதி செட்டிவெட்டுப் பட்டதுவும்

சோதி முகத்தாளை நம்மிடத்தில்—விடச்
சொல்லாமல் கண்ணும் பரையடைத்தான்.

பட்டினி யாறுநாள் காட்டுக்குள்ளே—பசி
யாற்றிய லட்சுமி யாள்தனக்குச்

செட்டிக்கி நான்செய்த துரோகத்தைத்—தா
னென்றவன் தானும் புலம்பலுற்றான்.

தூதுவ ரோடிக் குருட—னுரைத்தது
சொல்லவே ராசனுந் தான்கேட்டு

தீதுவினை செய்தோ மென்றுசொல்லி—ராசன்
செத்தான் குருடன் றனைவதைத்து

முன்னாலே செத்த தனேகமையா—வதை
யென்னாலே சொல்லி முடியாது

கண்ணாலே யாதொன் றறிந்தாலு—மதைக்
கரதல மாக விளங்கவேணும்.

மந்திரி போத சந்திரனுங்—கதை
மார்க்கமுடன் சொல்லத் தான்கேட்டு

சந்திரன் போய்ப்பக லோனுதித்தான்—ராசன்
தானங்கள் செய்து கொலுவில்வந்தார்.

ஆதிநாள் மந்திரி மார்களை—யெல்லாம்
அழைத்து வரச்சொல்லித் தானிருந்து

சோதி முகமுள்ள ராசனமு—கேசன்
சொல்லுகி றான்கதை கேளுங்கடி.

ஆவி யுயிரும்போல் தானிருக்க—என்
னமைச்சர் செய்ததைக் கேட்டீர்களோ?

தேவி யுடன் நான் பஞ்சணை—மெத்தைமேல்
சிங்கார மாகப் படுத்திருக்கப்

போதவா தித்தனும் வந்தானும்—எந்தன்
பொற்கொடியாள் கொங்கை தொட்டானும்

கோபம் பதறி யாரென்று—கேட்கப்
போதவா தித்தனு மென்றானும்

இப்படியாக் கொற்ற போதவா—தித்தனை
என்னசித்தி ராக்கினைச் செய்யறது ?

செப்புங்கோள் மந்திரி மார்களே—யென்
றளகேச னுரைக்க அனைவோரும்

போதவா தித்தனைத் தர்னழைத்து—ராசன்
போதனை யெல்லா மவர்க்குரைத்து

நீதி முறையாய் நடந்தாயே—வந்த
நிந்தனை யென்ன உரையுமென்றார்.

மந்திரி மார்க ளுரைத்திடவே—போத
வாதித்தன் முன்பின் நடந்ததெல்லாம்

தந்திர மாக உரைத்திடவே—அந்தத்
தாரணை கேட்டு அனைவோரும்

பூருவ மாகிய மந்திரியில்—மகா
புண்ணிய னும்மனு நீதியுள்ளான்

பாருல காளழ கேசன்முகந்—தன்னைப்
பார்த்துமனு நீதி சொல்வாண்டி.

செம்மையாய் நீயு முரைத்தீரே—யெங்கள்
சித்தத்தைப் போலே நினைந்தீரே

நன்மைசெய்யத் தின்மை யானகதை—யொன்று
நானொன்று சொல்லுறேன் கேளுமென்றான்.

கோசலை யென்றொரு தேசமையா—அதில்
கோவிந்த னென்றொரு வேதியனும்

மாசில் லாததிரு மேனியனும்—அந்த
மாநக ரில்நெடு நாள்முதலாய்

தேசியென்று பேரு தானெடுத்து—அந்தத்
தேசத்தில் பிச்சைகள் தானெடுத்து

ஆதி யுடனே பிழைத்து—வருகையில்
அம்மன்கிளி யொன்று தான்வளர்த்தாள்,

இள்ளை யெனுங்கிளி தான்வளர்த்தா—ளவள்
கெர்ப்பமில் லாமல் மலடியினுல்

பிள்ளையைப் போலதைத் தான்வளர்த்தா—ளவள்
பேரில் லாத மலடியினுல்.

பேசிய பச்சைக் கிளிதானும்—பெற்ற
தாயிவள் என்றுமே தான்னினைந்து

பாச முடனவள் வீட்டுக்குள்ளே—பக
லோனுடன் ஆசைக்கி வந்ததுவே

பக்ஷியுடன் கூடி யனேகங்—கிளிகள்
பாதையி லாகாச மேபறக்கக்

கெற்சித மாயிது கூடப்—பறந்து
கேட்டுது நீரெங்கே போறீரென்று

எங்கேபேர் றீரென்று கிளிகேட்க—முன்
னேகிய பச்சைக் கிளிகளெல்லாம்

மங்கை யெனுங்கடல் மீதிருக்கும்—நல்ல
மாங்கனிக்குப் போருே மென்றனவே.

வாரிக் கனிகள் பொசிப்பானே—யிந்த
வையகத் தில்கனி தானிருக்கப்

பாரில் விருத்தர்கள் தான்பொசித்தால்—பதி
னுறுள்ள திரேகம் பெறுவார்கள்

என்று கிளிக ளுரைத்திடவே—கூடி
யேகி யிதுவும் பறந்ததுவே

சென்று கிளிக ளதுபொசிக்க—யிது
தின்னுமல் ஒருகனி தான்பறித்து

அன்னை பிதாவும் விருத்தரல்லோ—அவர்
தான்பொசித் தால்பதி னுருவர்

யென்றைக்கும் நம்மையுங் காத்திடுவார்—யென்று
யேகிக்கிளி வீட்டில் வந்ததுவே.

வீட்டில் கிளிகள் கனியைக்—கொண்டுவர
வேதியன் கண்டு மனமகிழ்ந்து

தாட்டீக மாகக் கிளியுரைக்க—முன்னே
தாரணை யெல்லா மறிந்ததுவே.

தாரணை யெல்லாம் கிளியுரைக்கக்—கனி
தாவென்று வேதியன் ருன்வாங்கி

பாருல காளும் அரச—னிடத்தில்
பார்ப்பானுங் கொண்டுபோய் வைத்தாண்டி.

இராசன் கனியையுந் தான்பார்த்து—மறையோன்
ஈன்றதை யெல்லாந் தான்கேட்டுப்

போசன் மனது மிகமகிழ்ந்து—இந்தப்
பூமியுள் ளோர்கள் பிழைக்கவென்று

ஆவ லுடன்மர மாக்கிவைத்து—அது
ஆகாச மட்டும் வளர்ந்தவே

காவலுடன் கட்டாய்த் தான்பார்த்து—நித்தம்
காத்து வருகின்ற நாளையிலே

வேதியன் வீட்டின் கிழிருக்க—மரம்
வேந்தனிட மாக வேயிருக்க,

பாதிமதி சூடும் நாத—னருளால்
பழவினை மூண்டதைக் கேளுமையா.

மாவு மொருகனி தான்பழுக்க—ராகு
வானது மீதில் படுத்திருக்க

.........................................................
பாம்புவி டங்கழைக் கனிமீதில்

................ தோன்றிட ராசன்—அறியாமல்
............... றுகொற்றவன் ராச னுரைத்தாண்டி.

................. தொல்லுல கெல்லாரு—பார்க்கவற்
................மாங்கனியைத் தின்னுமென் றுரைத்தார்

............ உயிர்வாங்கி எமலோகந் தான்போகப்—பாவியை
......... யிப்பவே கொண்டுவா வென்றுரைத்தான்.

............ ன்றன்னை யுன்கோத்திர வீரமா—மானதினால்
............ ரல்லிஒத்தைக் கண்ணைப் பிடுங்கியே
[விட்டானே.

............ துவலு வேகமாய் வீட்டுக்குத்—தானடந்து
.................................................................

...............சாதனை யெல்லாம்நீ செய்ததென்று—கிளி
தன்னைப் பிடித்துக் கழுத்தறுத்தான்.

கொற்றவ னும்பின் னறிசெயாமல்—வேத
கோவிந்த னுடமனம் மாறாமல்

சித்தகன் போலவே செ(க)த்தார்க—ளானல்
தீவினை வந்ததைக் கேளுமையா.

பட்டணந் தன்னிலே வீற்றிருக்கும்—பல
சாதியி லேயொரு வண்ணாத்தி

கட்டி யுண்டவள் மாமி—மருமகள்
கையிணக்கஞ் செய்து கொண்டார்கள்.

மாமி மருமகள் மேல்பகைத்து—நஞ்சு
மாமரம் தன்னில் பழமெடுத்துக்

காமி யகளும் பொசிக்கப்—பதினாறு
காரிமை பேர்லே யிருந்தாளே.

ஆறுபத் துவய துள்ளவள்—மாங்கனி
யாலே வயது பதினாறாய்

வேறுபட்டு ரூப மானதைக்—கண்டவள்
வேகமாய் மாமரங் கீழிருந்தாள்.

ராம னருளா லிவளிருக்க—அப்போ
மாமியைத் தேடி மருமகளும்

கோபமா யென்றவள் நஞ்சு—மாங்கனி
கொன்றுதோ வென்றிவள் கிட்டவந்தாள்.

என்னுடன் மாமியார் சண்டையிட்டே—வர
யிவ்வழிக் காணியோ வென்றுரைத்தாள்

சொன்ன மருமகள் தன்னைக்காட்டிக்—கனி
தோரணை யெல்லாம் நாமுரைக்காம்

உந்தனுடன் சண்டை யிட்டதுவும்—என்
னுயிர்விடு வேனென்று வந்ததுவும்

இந்தமாங் கனியைத் தின்றதினால்—இள
வயசா யிப்பக் கண்டதுவே

வார்த்தைகள் சொல்லியே மாமியைக்—கூட்டியே
வாவென்று வீட்டினில் கணவனுடன்

சாற்றினா ளிந்த நடத்தையும்—யோகமுந்
தானறிந்து ராசன் கேட்டதுவும்

கேட்டுவண் ணாத்தியைக் கூட்டிவந்து—ராசன்
கிட்ட நிறுத்தி யுரையுமென்றான்.

நாட்டுக் காகாம லிருக்குதையா—நஞ்சு
மாங்கனி யொன்று தானெடுத்து

யென்னை மருமகள் செய்ததுக்—காக
யிறந்துநாம் போவோமென் றேநினைந்து

தின்னப் பழைய நிறம்போய்—வசீகரத்
திரேகமு மாச்சுதென் றேயுரைத்தாள்.

மாங்கனி தின்றவண் ணுத்திசொல—ராசன்
மாங்கனி ரெண்டு கொண்டுவந்து

சாங்கள முள்ளந் தின்றதினல்—முன்பு
சடலமும் போய்ப்பதி னுறுவரக்

கண்டு அரசன் மகிழ்ந்துகொண்டு—முன்
கண்ணே கொடுத்தோம் மறையோனே

சென்று கொண்டு வரச்சொல்லியே—ராசனும்
செப்பினுர் வேதி யணப்பார்த்து

பார்த்துச் செய்யாத முறையாலே—வந்த
பாவம் பெரியோர் மனம்பொறுத்துச்

சேர்த்துக்கொள் வோமென்று தானு—ரைத்து
வெகுபொன் னவர்க்குத் தான்கொடுத்தான்.

வேதியன் செம்பொன் தான்வாங்கி—யவன்
வீட்டினில் வந்து மனையாளுடன்

பர்தி மதியான் செயலல்லவோ—கிளி
பாவம் நமக்குப் பலித்ததடி

யென்று மறையோ னிருந்தானே—யதைக்
கண்டு மனையாளுந் தானிருந்தாள்

நன்றுதா னீதென்று சொல்லியே—யந்த
ராசனுங் கூடவே தானிருந்தான்.

ராச னிருந்திடத் தேவியுடன்—துணை
யாகிய பேர்க ளனேகரெல்லாம்

போசனுக் குமுன்னு ளிறக்க—வுயிர்
போமென்றே விட்டா ரனேகரையா

பச்சைக்கிளி நன்மை செய்திடவே—நல்ல
பாம்பாலே தீமை விளைந்திடவே

வச்சுப்பின் னேயறி யாமல்செய்த—பழி
வாதைபோலே வந்து முடிந்துவிடும்

என்று மனுநீதி மந்திரி—சொல்லவே
யின்பமாய் ராசன்ழ கேசுவரனும்

நன்றுதா னென்று சபைதனிலே—நாலு
மந்திரி மாரையுந் தானழைத்து

கோரத் தனஞ்செய்த போதவா—இத்தனைச்
சொல்லுவான் ராசனு மழகேசனும்

கோரத் தனஞ்செய்த ஞாயங்க—ளேதென்று
கொற்றவன் சொல்ல அடிபணிந்து

பாரீர் பசித்தார் முகம்பார்த்துப்—பசி
யாத்த பழிவந்த தென்றகதை

வீரத்துடன் கேளு மென்றுசொல்லிப்—போத
வாதித்த னுங்கதை சொல்வாண்டி.

தாப முடன்விசை யாபுரிப்—பட்டணம்
தானிருக் குமொரு வேதியனும்

பாபமொ ழிக்கவே காவேரியில்—ஸ்நானமும்
பண்ணுவோ மென்று மனமகிழ்ந்து

ஆட்சியி டத்திலே சொல்லிக்—கொண்டு
அப்பாதையும் விட்டுத் தானடந்து

தாட்சி யில்லாமல் நடந்தாண்டிக்—கட்டுச்
சாதமும் தோள்மீதில் தான்போட்டு

பாய்ச்சலூர்ப் பட்டணம் போய்ச்சேர்ந்து—வட
பத்திர காளிதன் கோவிலிலே

ஆச்சி யிருக்கு மந்தக்—கரையில்
வடபால் விருட்சத்தின் கீழ்ப்பால்

வேதிய னுஞ்சுமை தானிறக்கி—நதி
மீதினில் ஸ்நானங்கள் தானுடிச்

சாதம் பொசிக்க வருகையிலே—யொரு
சர்ப்பமே வந்ததைக் கேளுமையா.

செழுமயி லாடு மதுரைப்—பட்டணம்
தேயத் திருந்தொரு வேதியனும்

யேழுவய துள்ள மாமறை—யோனும்
யேகியே ஆல மரத்தடியில்

வந்தவன் ஆல மரத்தின்கீழே—அன்ன
மயக்க மாகவே தான்படுத்தான்

இந்தப் பிராமணன் யென்னவென்ருன்—அன்ன
மில்லாமல் மயக்க மென்றுரைத்தான்.

அன்ன மயக்கமென் றேயுரைக்கப்—பசி
யாகவே சாதந் தனையவிழ்த்து

உண்டுபெர் சித்து வருவோமென்றே—அய்யர்
தண்ணீர்க் கரையின் அருகேபோய்

அன்னமும் அய்யன் பொசித்திடவே—வந்த
அய்யனும் ஆலில் படுத்திடவே

ஒன்றுக்கு மொன்று தெரியாமல்—வந்த
ஊழி வினைகளைக் கேளுமையா.

காக முடன்கெரு டாழ்வாரும்—ஒரு
சர்ப்பத்தைக் காலில் பிடித்துவர

வேக முடன்மரம் மேலேவைத்துக்—கொத்தி
வேதனையால் நஞ்சு கக்கிவிழச்

சர்ப்பமது நஞ்சு கக்கிவிழக்—கட்டுச்
சாதத்தின் மேலே விழுந்திடவே

உற்பன மையன் அறியாமல்—சாதம்
உண்ட மறையோனைத் தானெழுப்பிக்

கையிலே சாதத்தைத் தான்போட—அந்த
ஐயனும் வாங்கிவர்ய் வைத்திடவே

மெய்யெலாம் நஞ்சு பறந்திடவே—உயிர்
மேவியே வானிடஞ் சேர்ந்திடவே

பாம்பு விஷமென் றறியாமல்—அவன்
பாய்ச்சலூர்ப் பட்டணத் தாரிடம்போய்

வீம்பு பெருகின மறையோரிடத்தில்—அவன்
விண்ணப்பஞ் செய்ததைக் கேளுமையா.

வயது சென்ற பிராமணனும்—அன்ன
மயக்க மாகவே படுத்திருந்தான்

தயிருவிட்ட கட்டுச் சாதத்தைப்—போட்டேன்
தான்பொசித்து விக்கித் தானிறந்தான்

நல்லடக்கஞ் செய்ய வேணுமென்றான்—அந்த
நாட்டினி லுள்ள மறையோர்கள்

எல்லோரும் மரத்தின் கீழே—வந்து
இறந்து கிடக்கிற வேதியனை

பார்த்திவன் கொன்ற வன்முதலே—......
பழிசெய்தா னென்றவ னைப்பிடித்துச்

சேர்த்து வடபத்திர காளிதன்—கோவில்
சொல்லென் றவனை யடைத்தார்கள்,

பத்திர காளிதன் கோவிலிலே—அந்தப்
பார்ப்பானும் ஆறுநாள் பட்டினியாய்
வித்தார மாகவே பத்துக்—கவியது
விளம்பினன் பத்திர காளிதன்மேல்.

பார்ப்பான் கவிபடித் திடவே—யந்தப்
பாய்ச்சலூர்ப் பட்டணம் வெந்திடவே
காப்பா யிருக்கிற வடபத்திர—காளிதன்
சன்னிதி வேதியன் பிள்ளையின்மேல்

ஆவேச மாகவே வந்துசொல்லு—மிவன்
ஆலம ரத்தின்கீழ் வந்ததுவும்
தாவியே கருடன் வந்ததுவும்—நல்ல
சாதந் தனில்விடம் வந்ததுவும்

பத்திர காளி யுரைத்திடவே—அந்தப்
பாய்ச்சலூர்ப் பார்ப்பா ரனைவோரும்
சித்திர மாகப் பிராமணன்—காலில்
தெண்டம்பணிந்து அனுப்பி வைத்தார்.

பசித்தார் முகத்தைத் தான்பார்த்துப்—பசி
யாத்த பழிவந்த தென்றகதை
நீசத்தா ரென்றொரு வருக்குமுண்டோ—வென்று
நேசமா மிப்போத வாதித்தனுமே

எந்தன் தலையில் விதித்ததையா—வென்
றெழுந்தா னப்போத வாதித்தனுமே
சந்தைக் கடையிலே கன்னமிட்ட—கள்ள
வண்ட னென்றொரு கள்ளனையும்

கூட்டி வரச்சொல்லித் தான்நிறுத்தி—முன்னங்
கோவில் முடித்திட்ட சாதந்தன்னை
ஊட்டி யவனும் பொசிக்கவிஷ—மேறி
யொன்றுஞ் சொல்லாமல் மடிந்தாண்டி.

பின்னை யொருத்தனைக் கூட்டி—வந்து
பொரியம்பைத் துறக்க அவனுஞ்சாக
அன்னை படுத்திடும் பஞ்சணை—மெத்தைமேல்
ஆங்கார மாய்ப்போத வாதித்தனும்

பள்ளியறைக் கட்டில் மேல்போட்ட—தந்தப்
பாம்பையு மஞ்சுண்டு விரல்தனையும்

அள்ளிவந்து ராசன் முன்னேவைத்து—அந்த
அத்தாட்சி யெல்லாம் காண்பிச்சு,

பார்த்து அரசன் மகிழ்ந்திருக்க—முன்னால்
பாவனை யெல்லாம் பணிந்துரைப்பான்.

நேத்து ராத்திரியில் பட்டணஞ்—சுத்தியே
நேசத் துடனேநான் போகையிலே

பத்திர காளி யழுததுவும்—அவள்
பாதம் பணிந்துநான் கேட்டதுவும்

யிந்தப் படியெல்லாம் வேறொரு—துர்ப்புத்தி
யேதொன்றும் நானும் அறிந்ததில்லை

அந்தப் படியெல்லாம் தான்கேட்டு—அழ
கேந்திர னும்மன மகிழ்ந்திருந்து

பெண்ணாய்ப் பிறந்தவள் பேச்சைக்கேட்டு—நானும்
பேதக மாக நினைந்தேனே

சின்னப் படுத்த யிருந்தோமே—யென்று
செப்புவான் ராச னழகேந்திரன்

ஆழி சூழ்ந்த புவியிற்குள்ளே—ரட்சித்
தாரையும் பட்சித்தா ரன்னாளில்

கேளுங்கோள் மந்திரி மார்களென்றே—அழ
கேந்திரன் சொல்ல அனைவருமே

காவேரி யென்றொரு பட்டணமாம்—அந்தக்
காசினி யிலொரு மாமறையோர்

தேவாதி தேவன் பிரமன்—செயலால்
செய்தா னவனுக்கு ஆறுபிள்ளை

புத்திரன் ஆறு பிறந்திடவே—அந்தப்
பெண்ணாள் மரண மடைந்திடவே

சித்தங் கலங்கியே வேதியனும்—அந்தத்
தேசத்தில் பிச்சைகள் தானெடுத்துப்

பிள்ளைக ளாறையும் காப்பாற்றி—அந்தப்
பிள்ளைகள் மெத்த மனந்தேறி

வல்லமை யாக வருகையிலே—வினை
வந்தவகை கேளும் மந்திரியே.

பட்டணத்தில் பிச்சை யெடுக்காமல்—நிதம்
பாலை வனத்திலே தானேகிச்

சட்டமுடன் மூங்கி லரிசியைக்—கூட்டியே
தானெடுத்து வீட்டில் கொண்டுவந்து

தன்கையி னாலே சமைத்துக்—குழந்தைக்குச்
சாப்பிடப் பண்ணி யவன்போசிப்பான்

எங்கே வெளியவன் போனாலும்—பிள்ளைக
ளேங்கியே பார்த்தங்கே தானிருக்கும்.

பங்குனி மாச மகோரத்திலே—அனல்
பத்தியே மூங்கிலும் வேகையிலே

செங்கனி போலவே பார்ப்பானது—...........
தீப்பிடித்து மூங்கில் தள்ளாடிப்

பொட்டெனக் கம்பையி னால்தாக்கிக்—கீழே
போட்டான் குளிர்ந்த மண்மேலே.

பாம்பையும் பார்ப்பானும் ரட்சிக்கவே—நல்ல
பாம்பும் அவனை வழிமறித்து

வீம்பாகப் போகிற மறையவனே—பசி
வேகம் கோரமா யிருக்குதென்று

முன்னேகட் டிக்கொண்டு பாம்புசொல்ல—மறை
முக்கணன் றன்செய லென்றுசொல்லி

அன்னையில் லாத குழந்தைக்கு—வேறொரு
ஆதார மில்லையென் றேநினைந்து

நிற்கிற வேதி யனைப்பார்த்து—வெகு
நேசமாய் நல்லபாம் பானதுவும்

பக்குவ மேது நினைக்கிறாய்—வெகு
பசியாகுதே வேதியா வென்றுரைக்க,

பாம்பு உரைத்த மொழிகேட்—டப்போது
பார்ப்பானும் மெத்த மனங்கலங்கி

வீம்பு ரைத்திடும் நாகேந்திரா—ஒரு
விண்ணப்பஞ் சொல்கிறேன் கேளுமையா

புத்திர ராறு மெனக்குண்டு—அதைப்
பெற்றவள் யமனிடத் தில்சென்றாள்

செத்ததினால் மூங்கி லரிசியினா—லவர்
சீவனைக் காப்பாற்றி நானுஞ்சென்று

அன்னஞ் சமைத்துக் கொடுப்பே—னையா
யாசையினா லொன்று வேறுமில்லை

பின்னை யெனக்கொன்று மில்லையையா—வென்று
பேதை மறையோ னுரைத்திடவே
சர்ப்பமுங் கேட்டு மனமகிழ்ந்து—மறையோ
னங்கையில் நாகமாணிக் கந்தான்கொடுத்துக்
கற்ப காலமுந் தான்பொசிக்கப்—பிள்ளைக்
கையிற் கொடுத்து வாவெனவே
சத்தியம் பண்ணியே சர்ப்ப—ராசனிடந்
தானடந்து பிள்ளைக் கையினிடஞ்
சுத்தியே வந்து யேதென்று—கேட்கச்
சொல்லு வானும் வேதியனும்
மூங்கில் வனத்தில்நான் சென்றதுவும்—சர்ப்ப
முன்னு லேவந் துதித்ததுவும்
நீங்கள் கட்டுமென் றதுவே—மணி
நீலரத் தினங்கையி லீன்றதுவும்
என்று ரைத்து மறையோனு—மவன்
ஏகியே சர்ப்ப மிடத்தில்வந்தான்
நின்றதென்னைப் பொசியு மையாவென்று—வெகு
நேசமாய் வேதியன் தானுரைக்கப்
பார்த்து மறையோனை நாகேந்திரன்—இந்தப்
பாலை வனத்தில் மடியாமல்
காத்துரட் சித்த மறையோனைக்—கொல்லக்
கர்மம் நினைந்தோமே யென்றுசொல்லிச்
சீவனம் மறையவன் கையிற்கொடுத்—தங்கே
செத்தது நல்லபாம் பானதுவும்
பாவம் நமக்குப் பலித்ததென்று—பார்ப்பான்
பாதை நடந்து மனையில்வந்து
பிள்ளைகள் கையிலே தான்கொடுத்து—ஒன்றும்
பேசாமல் வேதியன் தானிருந்தான்.
வல்லமை செய்த தறியாமல்—அங்கே
மாண்டது வேதியன் றன்னுடனே
சொற்படி பெண்பிள்ளைச் சொற்கேட்டு—வெகு
தோஷம் மனதில் நினைந்தோமே
விற்படி மாயன் கிருபையினு—லப்போ
வேந்தனு மெத்த மனமகிழ்ந்து

மந்திரி நாலுபே ரையுமழைத்து—வெகு
வார்த்தை வணக்கமாய்த் தானுரைத்துத்

தந்திர மாகப் பணிந்திறைஞ்சி—வெகு
தானங்கள் சொர்ணங்கள் தூவிவற்றச்

சிம்மா சனத்திலே தானும்வைத்து—வெகு
செம்பொன் னவர்க்கு வரிசைதந்து

நம்மாலே வந்த பிழைகளெல்லாம்—குல
நாதர்பொறுத் தருள வென்றுசொல்லிக்

கன்னிகா தான மநேகஞ்செய்தார்—கோவில்
கட்டியே குளங்களும் வெட்டிவைத்தார்

வன்ன மரங்க ளநேகம்வைத்தா—ரந்த
மானில மெங்கும் புகழ்வைத்தார்.

ஆவியொன்றுங் கூடு ரெண்டாக—அழ
கேந்திரனும் மந்திரியு மொன்ருக

பாவனை யாகவே வாழ்ந்திருந்தார்—வெகு
பட்ச முடன்வெகு உச்சிதமாய்
நாடெல்லாம் போற்றிய வீரபத்திரர்—வாழும்
நற்சிங்கம் வாசல் புறகங்கணுமாய்

தேசங்கள் மெய்க்கவே பாடிவைத்தோர்—வாழி!
தேவர் நகர்கட லான்வாழி!

பூலோகந் தன்னிலே நாலுபேர்—மந்திரி
போதவா இத்த னுடன்வாழி!

தேசங்கள் மெய்க்கவே பாடிவைத்தோ—ரவர்
சந்ததி நீடூழி வாழியதே!

காரண மாகவே நாலுபேர்—மந்திரி
கதைமு டிந்தது வாழியதே!

நாரணர் லட்சுமி யும்வாழி—நாடு
எங்கும் செழிக்கவே தான்வாழி!

முற்றும்!

---

# PĀLAIYĀNANTAR ÑĀNA-K-KUMMI

*Edited by*

VIDVĀN T. PERIYANDAVAN

Ānmās (souls) take their births in this world according to their Karma. God himself has showed different paths for the salvation of the souls. To enable such souls to find the right path suited to their salvation, men of spiritual wisdom have suggested practical ways of Yōga and Ñāna.

Pālaiyānantar, is the author of this work. Pālaiyānantar Ñāna-k-kummi, is one such spiritual poem. The work is in simple style though rich in its philosophical content.

From certain references it is gathered that the author belongs to Maturāpuri. This work is based on the palm leaf preserved in this Library under D. No. 1803 of the Descriptive Catalogue. There is another palm leaf work under R. No. 7594. This is also collated with D. No. 1803 and is edited with the necessary additions and corrections.

---

# பாலையானந்தர் ஞானக்கும்மி

உலகிடை ஆன்மாக்கள் மும்மலவயத்தால் பிறவியெடுத்து இன்னலுறுகின்றன. இறைவன் தன்னருளை ஆன்மாக்களிடையே பொழிந்து, அவை, மலமொழித்து நன்னெறி கண்டுய்ந்து தம்மையடைய பல்வேறு வழி வகைகளை வகுத்துள்ளார். எனினும் மாயையால் கட்டுண்டுகிடக்கும் ஆன்மாக்கள், பள்ளத்துட்பாயும் வெள்ளமே போல எளிதில் பாசச்சுழியில் சிக்கித் தவியா நின்று, உய்யுமாறறியாதுழல்கின்றன. இந்நிலையை யகற்றி, ஆன்மாக்களை நன்னெறி நிறுத்த இறைவன் அருள்பெற்ற சான்றோர் பலர், யோக, ஞானநெறிகளைப் பற்றியும் அவற்றைப் பின்பற்றித் தூல உடலை விடுத்துச் சூக்குமப் பொருளையடையும் வழிவகைகளைப்பற்றியும், பல்வகைப் பொருளைச் சில்வகை எழுத்திற் செறித்துத் தந்துதவா நின்றனர். அங்ஙனம் உதவா நின்ற சான்றோர் குழாத்துள் 'பாலையானந்தர்' எனும் சீர்சால் பெருந்தகையார் ஒருவர். அவர், 'கும்மி' என்ற இசைப்பா வகையால் இனிய, எளிய நடையில் அருளிய சிறு நூலே ஈண்டு 'பாலையானந்தர் ஞானக் கும்மி', எனும் பெயருடனிலங்குகின்றது.

இதனுள், உயிர்கள், வினைவயத்தாற்றோன்றி, அழிந்து, தோன்றுகின்ற நிகழ்ச்சியை உழவுத் தொழிலுடன் உருவகித்து, பிறப்பெடுத்தலால் ஏற்படும் இன்னல்களை எடுத்தியம்பி, அவற்றைத் தடுக்க இறைவன் அடிநீழல் அடையவேண்டுமென்றும்; இறைவன் திருவடி நீழல் அடைய முடியாவாறடைத்துள்ள பாசமாகிய பூட்டை, மோன நிலையாந் திறவுகோற் கொண்டு திறக்க வேண்டுமென்றும்; மோனநிலை கைவரப்பெறற்கு யோகநிலை இன்றியமையாததென்றும்; யோகநிலையெய்துதற்குச் சுவாசத்தைக் கட்டுப்படுத்தப் பழகவேண்டும் என்றும்; யோகத்திற்கு முதன்மையானது உமைதீட்சை என்றும் கூறப்பெறுவதுடன், மோனநிலை யெய்துதற்கான பல்வேறு படிகளும், விரிவாகவுந் தெளிவாகவும் விளக்கப்பட்டுள்ளன. மேலும் 'ந'வ்வெழுத்து நான்முகனையும், 'ம'வ்வெழுத்து நாரணனையும், 'சி'வ்வெழுத்து உருத்திரனையும், 'வ'வ்வெழுத்து மயேசுவரனையும், 'ய'வ்வெழுத்துச் சதாசிவத்தையும் குறிக்குமென்றும்; இவ்வைந்தெழுத்தாற்றான் உலகம் இயங்கா நின்றதென்றும்; மனக்குதிரையை

ஞானக் கொறடாவால் எளிதில் கட்டுப்படுத்த முடியும் என்றும்; மோன நிலையும் ஞான நிலையும் கைவரப் பெறுமல் சருகைத்தின்று சருகாகி, தாடியும் சடையும் வளர்த்து ஆடுகளைப்போற் றிரிபவர் கள் உண்மைத்துறவிகள் ஆகாரென்றும் ; யாரும் எளிதிற் கண் டறியாத பொருளைக் கண்டு உளந்தெளிவதுதான் முத்தி நிலை என்றும் இதன்கண் சுவைபடக் கூறப்பட்டுளது.

இச்சிறிய நூலின் ஆசிரியர், 'பாலையானந்தர்' என்று தெரிகின்றது. இந்நூலுள் காணப்படும், 'தாரிலுயர் மதுராபுரி வாலைதாசன் சொலுங் கும்மிப்பாடலுக்கு', எனும் பகுதியைக் கொண்டு, இவ்வாசிரியர் 'மதுராபுரி' எனும் ஊரைச்சார்ந்தவராக விருக்கலாமென் றெண்ண இடமுண்டு. இவர் சைவத்தின்கண் ஆழ்ந்த பற்றும், நிறைந்த ஞானமும் உடையவரெனத் தெரிகிறது. இஃது, இந்நூல் நிலைய டிஸ்கிருப்டிவ் காட்டலாக்கு 1803-ஆம் எண்ணின் கீழ் விளக்கப்பட்டிருக்கும் பனையோலைச் சுவடியை மூலமாகக் கொண்டு இங்கு வெளியிடப் பெறுகின்றது. மூவருடக் காட்டலாக்கு 7534-ஆம் எண்கொண்ட பனையோலைச் சுவடி யொன்றும் இப்பெயருடன் உள்ளது. அந்தச் சுவடியுடன் இதை ஒப்பிட்டுப் பார்க்குங்கால், இதிலில்லாத பல பாடல்களும், பாட பேதங்களும் கிடைத்தன. அவையும் இதனுள் ஆங்காங்குச் சேர்க்கப்பட்டுள்ளன.

த. பெரியாண்டவன்.

# பாலையானந்த சுவாமியார் ஞானக்கும்மி

## பாடல்

சீர்மேவும் ஞானவடி வான—பர
தேசிகன் சற்குரு தன்னருளால்
பார்மீதில் ஞானக் கும்மிபாட—சிவ
பாலன் கணபதி காப்பாமே. 1

அம்பிகை வாலை பதம்போற்றி—அரு
ளானந்தக் கும்மித் தமிழ்பாடத்
தும்பி முகனுக் கிளையவனுஞ்—சிவ
சுப்பிர மணியனுங் காப்பாமே. 2

நாலா பேதமு [1]மோராறும்—வெகு
நானு பேதமு நின்றுனை
மேலாய்ப் போற்றிக் கும்மிபாடச்—செந்தில்
வேலவர் தன்பதங் காப்பாமே. 3

*என்குரு நாதர் பொதிகைவாழ்—மாமுனி
இருசர ணைந்தனி ருதயத்தி
லன்புடன் போற்றிக் கும்மிபாட—நந்தி
யடியிணை போற்றித் துதிப்போமே.

தாரி லுயர்மது ராபுரி—வாலை
[2] தாசன் சொலுங்கும்மிப் பாடலுக்கு
[3] மேரு வதனடி மூலமுக்—கோண
விஜய கர்பதங் காப்பாமே. 4

ஆதியு மந்தமு மொன்றாகி—[4]வளர்
அண்ட பிண்டமு மிரண்டாகிச்
சாதி பலபல வேறாகி—நின்ற
தத்துவங் கேளடி ஞானப்பெண்ணே! 5

தேக மான[5]மலப் பாண்டமதில்
[6] சிற்பரம் வந்திடு முற்பனத்தை

---

1. மோராராகமும். 2. சாமி 3. மேருவைத்தீண்டிய 4. சிவ 5. கருக்குழியிலந்த 6. சீவ னிருந்து விளையாடும். *இப்பாடல் மூவருடக் காட்டலாக்கு 7534-ஆம் எண்கொண்ட சுவடியில் காணப்படுகிறது. இனி, இவ்வாறு குறியிடப்பட்டுள்ள பாடல்களும் மேற்சுவடியி லுள்ளனவாமெனக்கொள்க.

யோகமென் னுந்தமிழ்ப் பாட—மன
முகந்து கேளடி ஞானப்பெண்ணே ! 6

யேக வெளிப்பெரும் பட்டணமா—மதி
[7] லேதோ சித்த ஞெருவனுண்டாம்

வாக நிலைபேச வாயுமில்லை—[8] யந்த
மாப்பிள்ளைப் பெண்ணென்று வைத்தாண்டி. 7

சாட்சியென் னும்[9] பரம மாப்பிள்ளைக்கி—மூல
சத்திய மென்றொரு பெண்ணுச்சு

சூட்சம காரணம் ரெண்டும்நிற்கும்—நிலைத்
தூலனு மெங்குருள் ஞானப்பெண்ணே ! 8

ஊமைய னென்று மறிந்துகொண்டா—ளந்த
ஊமையன் பேச்செல்லாம் [10] நாமங்களுள்

சீமையை யாள துசங்கட்டினுன்—நற்
சீமாட்டித் தானடி ஞானப்பெண்ணே ! 9

பெண்ணரசான துரைத்தனமா—மதைப்
பெண்ணென்று சொன்னலுங் [11] கேள்வியுண்டாம்

மண்ணையும் விண்ணையுங் கூட்டிப்பயிர்—செய்த
மார்க்கங் கேளடி ஞானப்பெண்ணே! 10

[12] பட்டணங் கட்டி மகராசி—துரை
பாங்குடன் சீமை [13] யதிகாரஞ்

சட்டமுஞ் சொல்லத் துலையாதே—யிதைச்
சற்றே கேளடி ஞானப்பெண்ணே! 11

[14] அஞ்சு ரஞ்சு வகுப்பாச்சு—யதி
[15] லஞ்சு ரஞ்சு பிரிவாச்சு

அஞ்சு ருக்கொரு [16] விஸ்தார—மதற்
கான [17] குளமுண்டு ஞானப்பெண்ணே! 12

ஊரை யடுத்த மலையுமுண்டா—மதற்
குள்ளா யிருந்த நிலைக்காரற்

பேரை யுரைக்க யினிக்கேளு—மவர்
பெருமை தானடி ஞானப்பெண்ணே! 13

---

7. ஏகாந்த 8. அதை 9. பிரம 10. நாமெங்கிருன் 11. குற்றமுண்டாம் 12. பட்டமுங்கட்டு 13. யதிகாரி 14. அஞ்சாஞ்சு 15. அஞ்சாஞ்சு 16. சிற்ருரும் 17. வயலுண்டாம்.

[18]தலமன் ஞரி லிருப்பவரா—மந்த
சட்டையப் பிள்ளை நெட்டையனும்
நிலமு மானிய மென்னுதென்ரு—லந்த
நிசந்தெ ரியுமோ ஞானப்பெண்ணே! 14

கும்பகோ ணத்திலே யப்புப்பிள்ளை—யவர்
[19]கூட்ட மத்தால்வெகு வாட்டமென்று
செம்பாதிப் பங்குக் கேட்டுவந்தால்—ஞாயந்
[20]தேறுவ தெப்படி ஞானப்பெண்ணே! 15

மூலக் குடிவன்னி [21]தேவ—ரைவர்
மூர்க்கமுந் தீர்க்கமு [22]மார்க்கமுண்டோ
நாலுகரைப் பங்கு நாமெங்குரு—ரந்த
ஞாயந் தெரியுமோ ஞானப்பெண்ணே! 16

காற்றவ ருயக் கவுண்டனுக்குத்—திசை
காவலு மற்ற விசாரணையும்
பாற்று வருவது நாமெங்குரு—ரந்தப்
படிநி லைக்குமோ ஞானப்பெண்ணே! 17

ஆகாச மாடன் பரஞ்சேதி—யவன்
அஞ்சுக் கரைப்பங்கு தன்னுக்குள்ளே
சேகர மாமென்றுஞ் சொல்லுகிரு—ரந்தச்
சேதியைக் கேளடி ஞானப்பெண்ணே! 18

அம்பலக் காரர் மூன்றுபேராம்—பின்னு
[23]மஸ்தக நாட்டுக் கணக்கனென்றும்
வம்புசெய் தாலந்த முன்னு—ளனும்படி
வகைதெ ரியுமோ ஞானப்பெண்ணே! 19

ஒன்பது கூத்தனும் பங்காளி—யெந்த
னூருக்குள் [24]ஊர்களு மப்படியாம்
அன்பது சேருவைக் காரனுக்கு—மவன்
அண்ண னெருத்தனும் ஞானப்பெண்ணே! 20

கோவில் குருக்க ளொருப்[25]பரன்—அவன்
[26]கூடிப் பிறந்த விரோதியாவான்

---

18. தலை 19. கூடப்பிறந்தவ ரஞ்சுபேராம். 20. தெரிவ 21. தேவரையரவர் 22. யார்க்குமுண்டோ 23. ஆஸ்தான நாட்டுக் கணக்கருண்டாம். 24. நீங்களும் 25. பார்ப்பான் 26. கூடப் பிறந்த நல்லோரியவன்.

